தெரியவருகிறதென்னில்; அதற்கு முன்னே *அந்தர் பஹிச் ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ் ஸ்தித:* என்று பரமாத்மாவுக்கு ஸர்வத்ர ஆத்மதயா வ்யாப்தியைச் சொல்லி உடனே *ஸ ப்ரஹ்மா ஸ சிவ:" என்று அபேதம் சொல்லியிருக்கையாலே சரீராத்மபாவநிபந்தநமான அபேதமேயிதுவென்று எளிதாக அறுதியிட முடிகிறது. இப்படி ஆங்காங்கு தனித்தனியாக ஓதப்பட்டுள்ள இரண்டு வகையினுலான அபேதமானது *ஸர்வம் கலு* என்பதனுலே சேர்த்துச் சொல்லப்படுகிறது. இருவகையான அபேதமும் ஸாக்ஷாத்தாகவும் பரம்பரயாவும் சரீராத்மபாவத்தை மூலமாகக் கொண்டதாதலால் ''ஸர்வமிதம் ப்ரஹ்ம" என்பதற்கு—காணப்படுகிற கார்யபூத தேவமநுஷ்யாதி சேதநாசேதநாத்மகமான ஜகத்தை சரீரமாகவுடையது பரப்ரஹ்மம் என்றதாகப் பொருள் தேறுகிறது.

இங்கே பூர்வபக்ஷம் வருமாறு:—*ஸர்வம் கலு இதம் ப்ரஹ்ம* என்று ப்ரஸ்தாவிக்கப்பட்ட ப்ரஹ்மத்தைப்பற்றி அவ்விடத்தில் மேலே *ஏஷ ம ஆத்மா அந்தர் ஹ்ருதயே* என்று ஓதப்பட்டுள்ளது சரீரத்தினுள்ளேயிருக்கின்ற ஹ்ருதயத்திலிருப்பதாகச் சொல்லப்பட்டது. இதனுல் அந்த ப்ரஹ்மத்திற்கு சரீரம் ஸம்பந்தமாயதந மென்றும், சரீரஸம்பந்த நிபந்தனமான ஸுக துக்கங்களுக்கு அது போக்தாவென்றும், அல்பமானதொரு ஸ்தானத்தையுடையதென்றும் தெரிவிக்கப்பட்டதாகிறது. அவ்விடத்திலேயே *அணீயாந் வ்ரீஹேர் வா யவாத் வா* இத்யாதியால் அந்த ப்ரஹ்மம் அணுபரிமாணமுடையதென்றும் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆக, அல்பஸ்தானமுடைமை அணுபரிமாணமுடைமை ஸுகதுக்க போக்தாவாகை என்னுமிவை பரமாத்மாவுக்கு ஸம்பவிக்க மாட்டாதவை; ஜீவாத்மாவுக்கே ஸம்பவிக்கக்கூடியவை. ஆதலால் ஜீவாத்மாவே *ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம* என்று உபக்ரமத்திலுள்ள ப்ரஹ்ம சப்தத்தினுல் கொள்ளப்படவேண்டும். அந்த ஜீவாத்மா விசித்ர கர்ம விசேஷங்களடியாக தேவமனுஷ்யாதிபாவம் பெற்றுப் பிறப்பதனுல் 'ஸர்வமிதம் ப்ரஹ்ம' என்று சொன்ன அபேதம் உபபந்நமாகக் குறையில்லை. இந்த பூர்வபக்ஷத்தின்மேல் ஸித்தாந்தம் வருமாறு :—

ஸித்தாந்தம் :—*ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம தஜ்ஜலாந்* என்றிருப்பதை அடியில் உபபாதித்திருக்கிறேம். தஜ்ஜத்வ தல்லத்வாதிகளை அநுவதித்து அதை ஹேதுவாகக் கொண்ட அபேதம் இங்கு ப்ரதிபாதிக்கப்படுகையாலே கருமமடியாக தேவமநுஷ்யாதி பாவத்தையடையும் ஜீவாத்மாவினுடைய தேவமநுஷ்யாதி பாவத்திற்கு தஜ்ஜத்வ தல்லத்வாதிகள் ஹேதுவாயிருக்க ஔசித்யமே கிடையாது; ஒரு சேதநனைப்பற்ற மற்றொரு சேதநன் ஆத்மாவாயிருப்பது ஸம்பவிக்க மாட்டாதாகையாலே *ஸர்வமிதம்* என்று சொல்லப்பட்ட ஸர்வசேதநதாதாத்ம்யமானது ஒரு ஜீவனிடத்திலும் ஸம்பவியாது; ஆகவே இங்கு ப்ரஹ்மசப்தத்தாலே நிர்தேசிக்கப்பட்டவன் ஜீவனுக முடியாது மேலே உபாஸ்யங்களாக வோதப்பட்டிருக்கின்ற மநோமயத்வாதி குணங்கள் ஜீவாத்மாவினிடத்தில் ஸம்பவிக்க மாட்டாவாகையாலும் இங்கே ஜீவாத்மா அப்ரஸக்தனே; இதைச் சிறிது விவரிப்போம். இங்கு உபாஸ்யங்களாக வோதப்பட்டவை மநோமயத்வாதி குணங்க

ளென்று சொன்னோம்; மநோமயத்வம் ப்ராணசரீரத்வம் (பா)பாரூபத்வம் ஸத்யஸங்கல்பத்வம் ஆகாசாத்மகத்வம் முதலானவையாம் அக்குணங்கள். இவற்றுள் மநோமயத்வமாவது *ந சக்ஷுஷா க்ருஹ்யதே நாபி வாசா–மநஸா து விசுத்தேந* இத்யாதி ச்ருதிகளில் ப்ரஸித்தமான யோகபரிசுத்த மநோக்ராஹ்யத்வ மாகும். இதனால் ஹேயஸம்பந்தத்திற்கு உரித்தல்லாத தென்று தேறும். ஹேய ஸம்பந்தத்திற்கு உரித்தாமது பரிசுத்த மநோக்ராஹ்யமாக ஆகாதன்றோ. இது ஜீவனுக்கு அஸம்பாவிதம்; இவன் ஹேயஸம்பந்தத்திற்கு அர்ஹனாகையாலே. இனி, ப்ராண சரீரத்வமாவது *யஸ்ய ப்ராணச் சரீரம்* என்று அந்தர்யாமி ப்ராஹ்மண ஸித்தமாய் ப்ராணனுக்கு நியாமகத்வரூபமானது. (பா)பாரூபத்வ மாவது *ஆதித்ய வர்ணம் தமஸ: பரஸ்தாத்* இத்யாதி ச்ருதி ப்ரஸித்தமான உயர்வறவுயர்ந்த வொளியோடு கூடின விக்ரஹமுடைமை. ஸத்யஸங்கல்பத்வமாவது பலித்தே தீரும்படியான ஸங்கல்பமுடைமை. ஆகாசாத்மத்வமாவது *யஸ்ய ஆகாசச் சரீரம் என்று அந்தர்யாமி ப்ராஹ்மண ப்ரஸித்தமாய் ஆகாசத்திற்கு நியாமகத்வரூபமானது. ப்ரக்ருத ப்ரகரணத்தி லோதப்பட்ட இவை முதலான குணங்கள் ஜீவாத்மாவுக்கு ஸம்பவிக்க மாட்டாதவை. அடுத்த ச்ருதியில் *ஏவமித: ப்ரேத்ய அபிஸம்பவிதாஸ்மி* என்று ப்ரஹ்மத்திற்கு ப்ராப்யத்வமும் ஜீவனுக்கு ப்ராப்த்ருத்வமும் சொல்லப்பட்டிருக்கின்றது. ப்ராப்தாவும் ப்ராப்யனும் வெவ்வேறு வ்யக்தியாக இருக்கவேண்டுமாதலால் இந்த ப்ரகரணத்தில் ப்ரஹ்ம சப்த நிர்திஷ்டமானது ஜீவனாக இருக்கமுடியாது. இன்னமும் *ஏஷ ம ஆத்மா அந்தர் ஹ்ருதயே* என்று உபாஸகனை ஜீவனை மே என்று ஷஷ்ட்யந்த பதத்தினாலும், உபாஸ்யமான ப்ரஹ்மத்தை ஏஷ: என்று ப்ரதமாந்த பதத்தினாலும் நிர்தேசித்திருக்கிறது. இதனாலும் ப்ரஹ்மசப்தம் ஜீவாத்மவாசகமாக இருக்க முடியாது. இன்னமும் *ஈச்வரஸ் ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேசேர்ஜுந திஷ்டதி, ப்ராமயந் ஸர்வபூதாநி யந்த்ராரூடாநி மாயயா* என்கிற பகவத்கீதா வசனத்தினால் ஜீவாத்மாவின் ஹ்ருதயத்திலிருப்பவன் ஈச்வரனென்று விளங்குகிறபடியால் அத்தோடும் விரோதிக்கும். ஆகவே. *ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம* என்று ப்ரக்ராந்தமான ப்ரஹ்மமானது ஜீவனாக மாட்டாது. பரமாத்மாவேயாக வடுக்கும்.

இப்படியாகில், பரமாத்மாவை அபரிச்சிந்நனாக வோதியிருப்பதற்கு முரணாக இந்த ப்ரகரணத்தில் *ஏஷ ம ஆத்மா அந்தர்ஹ்ருதயே அணீயாந் வ்ரீஹேர் வா* இத்யாதிகளில் சொல்லப்பட்டதால் ஹ்ருதயரூபமான அல்ப தேசத்திலிருப்பும் அதற்கீடாக அல்ப பரிமாணமுடைமையும் பொருந்தாதே; சரீர ஸம்பந்த ப்ரயுக்தமான ஸுக துக்காநுபவமும் ப்ரஸக்தமாகுமே யென்னில்; இவ்விரண்டு சங்கைகளுக்கும் பரிஹாரம் கேண்மின்; பரமபுருஷன் ஸ்வத: அபரிச்சிந்நனாயிருக்கச் செய்தேயும் உபாஸகர்களின் அநுக்ரஹத்தின் பொருட்டு உபாஸகர்களின் ஹ்ருதயத்தில் ஸந்நிஹிதனாயிருந்துகொண்டு அல்ப பரிமாணனாயிருப்பது ஔபாதிகமாகும். அநுஸந்தாநார்த்தமாக இங்ஙனே ஓதப்படுகின்றதத்தனை. சரீரத்தினுள் புகுந்திருக்குமளவால் கர்மபலபோகம் ப்ரஸக்த மாகாது; ஜீவன் புண்யபாபரூபங்களான கருமங்களைப் பண்ணி அவற்றின் பலனையநுபவிப்பதாககவே சரீரத்தில் புகுகின்றபடியால் அவனுக்கு அந்த சரீர ஸம்பந்தம் ஸுக

துக்கபோகத்தின் பொருட்டு ஆகின்றது. பரமபுருஷன் சரீரத்தினுள் புகுந்திருப்பது நியமநார்த்தமாகவும் ஸ்வேச்சையினலாகவும். ஆகவே மேலே ப்ரஸங்கித்த இரண்டு சங்கைகளுக்கும் அவகாசமில்லை யென்றுணர்க. ... ... (12)

ஸர்வத்ரப்ரஸித்த்யதிகரணம் முற்றிற்று.

---

## முதலத்யாயம் - இரண்டாவது பாதத்தில் இரண்டாமதிகரணம்=அத்த்ரதிகரணம். (13.)

முன்னதிகரணமாகிய ஸர்வத்ரப்ரஸித்த்யதிகரணத்தில் பரமபுருஷன் உபாஸகர்களின் சரீரத்தினுள்ளே யிருந்தாலும் கருமபலன்களை யநுபவித்தலென்பது அவனுக்குக் கிடையாதென்று சொல்லப்பட்டது. அப்படியானல் கர்ம பல போக்தாவாகச் சொல்லப்பட்ட வ்யக்தி பரப்ரஹ்மமாக ஆவதற்கில்லை; ஜீவனுகவே யிருக்க வேண்டியதாகும் என்று சங்கை தோன்ற, அதைப் பரிஹரிக்க இவ்வதிகரணம் ப்ரவர்த்திக்கிறது.

அத்தா சராசரக்ரஹணுத் 1-2-9.

அத்தா—போக்தாவென்று ஓதப்பட்டவன், (ஸ:)—அந்த பரமபுருஷனே யாவன்; எதனுலென்னில்; சராசரக்ரஹணுத்—சேதநா சேதநாத்மகமான ஸகலப்ரபஞ்சமும் அந்த பரமபுருஷனுக்கு போஜ்யவஸ்துவாக ச்ருதியில் க்ரஹிக்கப்படுகையாலே. என்பது ஸூத்ரத்தின் பொருள்.

கடவல்லியில் இரண்டாவது வல்லியில் *யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரஞ்ச உபே பவத ஓதந:-ம்ருத்யுர் யஸ்யோபஸேசநம் க இத்தா வேத யத்ர ஸ:* என்கிற மந்த்ரம் ஓதப்பட்டுள்ளது. அதில் யச்சப்தத்திஞல் நிர்தேசிக்கப்பட்ட வொரு புருஷனுக்கு ப்ராஹ்மணவர்ணமும் க்ஷத்ரிய வர்ணமும் அன்னமாகிறதென்று சொல்லி ம்ருத்யு என்பவன் அந்த உணவுக்கு ஊறுகாயாகிறதாகவும் சொல்லிற்று. யாதொன்று மற்றவற்றை யுண்பதற்குக் கருவியாயிருந்து தானும் உண்ணப்பட்டு முடிகிறதோ அதனை ஊறுகாயென்பது உலகவழக்கு. ஒரு மாங்காயை யெடுத்துக் கொள்வோம்; இது தயிர்ச்சோற்றையுண்பதற்கு ஸாதனமாயிருந்து முடிவில் தானும் உண்ணப்படுவதாகவுள்ளதன்றோ; இது தான் ஊறுகாயின் லக்ஷணம். ப்ரக்ருதத்தில், ப்ராஹ்மணக்ஷத்ரியர்களை யுண்பதில் ம்ருத்யு உபஸேசநம் [ஊறுகாய்] என்று சொல்லுகையாலே, ம்ருத்யுவானவன் இதரவஸ்துக்களை யுண்பதற்கு ஸாதனமாயிருந்து தானும் முடிவில் உண்ணப்படுவதாக விளங்குகிறது. ம்ருத்யுவானவன் உண்ணப்படுகிருனென்றுல் இது ஸம்பவிக்கமாட்டாது. ஸம்ஹரிக்கப்படுகிருனென்பதே அதன் பொருள் என்க. இதர வஸ்துக்களை யுண்பதற்கு ஸாதனமாயிருக்கை யென்றதும் ஸம்ஹார ஸாதநத்வமென்றதாகவே கொள்ளவேண்டும். ம்ருத்யுவுக்கு ஸகலசராசரப்ராணி ஸமுதாயத்தினுடையவும் ஸம்ஹாரத்தில் ஸாதனமாகையன்றி, ப்ராஹ்மணக்ஷத்ரிய மாத்ர ஸம்ஹாரத்தில் ஸாதனமாகையில்லை. ஆகவே எந்த புருஷனுலே ஸம்ஹாரஸாதனமான ம்ருத்யுவைக்கொண்டு ஸகல சராசரமும் ஸம்ஹரிக்கபடுகிறதோ, அந்த ம்ருத்யுவும் ஸம்ஹரிக்கப்படுகி

ருனே, அந்த புருஷன் யாதொரு ப்ரகாரத்திலிரா நின்ருனே, அந்த ப்ரகாரத்தை [அப்பெருமையை] யாரறிவார்? ஒருவருமிலர் என்பதாகப் பொருள் தேறிற்று.

இங்கு யச்சப்தத்தாலே நிர்தேசிக்கப்பட்ட புருஷனை *ருதம் பிபந்தௌ* என்கிற அடுத்த மந்த்ரத்தில் ப்ரஸ்தாவித்து, அவன் எளிதாக உபாஸிக்கக் கூடியவன் என்பது தெரிவதற்காக உபாஸகனை ஜீவனோடு கூட ஒரே ஹ்ருதய குஹையில் அவன் ஸந்நிஹிதனு யிருப்பதாகச்சொல்லி, உபாஸநத்திற்குப் பல னை ப்ராப்யவஸ்துப்ராப்திக்கு உபகரணமாக உபாஸகனை ர(ஶி)தியாகவும் அவனு டைய சரீரம் முதலானவற்றைத் தேர் முதலியனவாகவும் பரிகல்பநம்பண்ணி அப் படிப்பட்ட உபகரணத்தைக்கொண்டு ப்ராப்தவ்யமான வஸ்துவை உபதேசிக்கிற பிரகரணத்தில் *ஸோதவந: பாரமாப்நோதி தத் விஷ்ணோ: பரமம் பதம்[1] என்று முன் சொன்ன ரதம் முதலிய வுபகரணங்களை யுடையவன் விஷ்ணுவினுடைய பரமமான பதத்தை யடைகிருனென்று விஷ்ணுவை ப்ராப்யனுகச் சொல்லி யிருக்கையாலே *யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரஞ்ச* என்கிற மந்த்ரத்தில் யச்சப்தத்தால் நிர்தேசிக்கப் பட்ட ஸம்ஹாரகர்த்தா பரமபுருஷனே யென்று நிச்சயிக்கப்படுகிறது.

இங்குப் பூர்வபக்ஷம்:—*யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரஞ ச* என்னும் மந்த்ரத்தில் ப்ராஹ்மணக்ஷத்ரியாதி ஜாதீயர்களான ஸ்த்ரீபுமான்கள் பரஸ்பரம் போக்யபூதர்க ளென்று ஏற்படுகிறது. அதனுல் யச்சப்தத்தினுல் நிர்தேசிக்கப்படுகிற போக்தா ஜீவாத்மாவாகவே யிருக்கத் தக்கவனென்று தெரிகிறது; கருமத்தின் பலனை ஸ்த்ரீபோகம் முதலானவை ஜீவனுக்கே ஸம்பவிக்குமாதலால். *ம்ருத்யுர் யஸ்ய உபஸேசநம்* என்று சொல்லியிருப்பதானது—ம்ருத்யுவானவன் ஜீவாத்ம ஸ்வரூ பத்தைக் குறித்து பாதகனல்லன் என்றிவ்வளவு தெரிவிப்பதிலேயே நோக்குடை யது. ஆகவே ஜீவன்தான் அந்த மந்த்ரத்தில் பிரதிபாதிக்கப்படுபவன்—என்று.

இதற்குமேல் ஸித்தாந்தம் வருமாறு - *ம்ருத்யுர் யஸ்யோபஸேசநம்* என் பதில் சொல்லப்பட்ட உபஸேசநத்வம் அபாதகத்வரூபம் என்று கொள்வதில் மிக வும் அஸ்வாரஸ்யமுள்ளதனுல், லோகப்ரஸித்திக்கிணங்க யாதொன்று மற்ற வற்றையுண்பதற்குக் கருவியாயிருந்து தானும் உண்ணப்பட்டு முடிகிறதோ அது தான் உபஸேசநம் என்று ஸ்வரஸமான பொருளே கொள்ள வேண்டுகையாலே கீழே விவரித்தபடி ம்ருத்யு ஸம்ஹாரஸாதனமாயும் ஸம்ஹரிக்கப்படுபவனுயு மிருக்கையே உபஸேசநமென்பதற்குப் பொருத்தமான பொருள்; போக்யத்வ மென்பது இங்குப் பொருளாக வழியில்லை. ஆகவே கருமபலன்களை யநுபவிப் பவனுன ஜீவனுக்கு இங்கு ப்ரஸக்தியேயில்லை. ... ... ... (13.)

(13.) அத்த்ரதிகரணம் முற்றிற்று.

## 14. அந்தராதிகரணம்

முன்னதிகரணத்தில *க இந்தா வேத யத்ர ஸ:* என்பதனுலே ப்ரமாத்மா தெரிந்துகொள்ள முடியாதவனெனப்பட்டது. அப்படியானுல், தெரிந்துகொள்ளக் கூடியவனென்று சொல்லப்பட்டவன் பரமாத்மாவாக இருக்கமுடியாதே யென்கிற சங்கையைப் பரிஹரிக்க இவ்வதிகரணம் தோன்றுகிறது.

ஸூ. அந்தர உபபத்தே: 1—2—13.

**அந்தர.**—கண்களினுள்ளே யிருப்பவன், (ஸ:)—அந்த பரமபுருஷனே; உபபத்தே:—அங்குச் சொல்லப்பட்டிருக்கிற அபயத்வம் அம்ருதத்வம் முதலானவை அப்பரமபுருஷனிடத்திலேயே பொருந்தக் கூடியவையாதலால், என்பது ஸூத்ரத்தின் பொருள்.

ச்சாந்தோக்யோபநிஷத்தில் உபகோஸலவித்யாப்ரகரணத்தில் *ய ஏஷோக்ஷிணி புருஷோ த்ருச்யதே: ஏஷ ஆத்மேதி ஹோவாச, ஏததம்ருதம் ஏததபயம் ஏதத் ப்ரஹ்ம* என்று ஓதப்பட்டுள்ளது அங்கு *அக்ஷிணி புருஷோ த்ருச்யதே* என்பதனுல் கண்ணிலுள்ளவனுக ஒரு புருஷன் ஏற்படுகிருன். அந்தர்யாமி ப்ராஹ்மணத்தில் *யச் சக்ஷுஷி திஷ்டந் சக்ஷுஷோந்தர:* என்ற வாக்யத்தினுல் கண்ணிலுள்ளவனுகவும் நியாமகனுகவும் ஓதப்பட்ட பரமபுருஷன் அந்த ய ஏஷ:* இத்யாதி வாக்கியத்தினுல் நினைப்பூட்டப் படுகிருன். ஆகவே அக்ஷிபுருஷன் பரமபுருஷனுகவே யிருக்கத்தக்கவன் என்றதாயிற்று. .... ... ... (14)

அந்தராதிகரணம் முற்றிற்று.

## 15. வைச்வாநராதிகரணம்.

ச்சாந்தோக்யத்தில் வைச்வாநரவித்யா ப்ரகரணத்தில் (5–11–1.) "கோ ந ஆத்மா? கிம் ப்ரஹ்ம?" என்று தொடங்கி "ஆத்மாநமேவ ஏநம் வைச்வாநரம் ஸம்ப்ரதி அத்யேஷி தமேவ நோ ப்ரூஹி" என்று வினவும், (5–18–1.) "யஸ்த்வேதமேவம் ப்ராதேசமாத்ரம் அபிவிமாநமாத்மாநம் வைச்வாநர முபாஸ்தே" என்று விடையும் காணப்படுகிறது. இவ்விடத்தில் பரமாத்மாவையே வைச்வாநரசப்தத்திற்குப் பொருளாக நிர்ணயிக்க முடியுமா முடியாதா? என்று ஸந்தேஹம். இங்குப் பூர்வபக்ஷம்=வைச்வாநர சப்தத்திற்கு நான்கு பொருள்கள் காணப்படுகின்றன; அக்நி, மஹாபூதங்களில் மூன்ருவதான பூதம், தேவதாவிசேஷம், பரமாத்மா — ஆக இந் நான்கு பொருள்களில் வைச்வாநர சப்தப்ரயோகம் ஆங்காங்குக் காணப்படுகிறது. இந்த ப்ரகரணத்தில் பரமாத்ம பரமாகவே நிர்ணயம் செய்ய ஆவச்யகதை யில்லாமையாலே முடியாதென்று பூர்வபக்ஷம் ப்ராப்தமாக,

இதன்மேல் ஸித்தாந்தம் இங்ஙனே யாகிறது.

ஸூ. வைச்வாநரஸ் ஸாதாரணசப்தவிசேஷாத். 1—2—25.

ஸாதாரணசப்தவிசேஷாத் வைச்வாநர: பரமாத்மா — ஸாதாரணமான வைச்வாநரசப்தத்தைப் பரமாத்மஅஸாதாரண தர்மங்களினுல் விசேஷித்திருப்பதனுல் இங்கு வைச்வாநரசப்த வாச்யன் பரமாத்மாவே யாகக்கடவன் என்று பொருள் தேறிற்ருயிற்று. தொடங்கும்போது *கோ ந ஆத்மா? என்று ஸகல ஜீவாத்மாக்களுக்கும் ஆத்மாவாயிருப்பவன் யாவனென்று ஜிஜ்ஞாஸையை வெளியிட்டு *யஸ் து ஏதமேவம் ப்ராதேசம் அபிவிமாநமாத்மாநம் வைச்வாநரமுபாஸ்தே ஸ

ஸர்வேஷு லோகேஷு ஸர்வேஷு பூதேஷு ஸர்வேஷு ஆத்மஸு அன்னமத்தி* என்று, வைச்வாநரோபாஸகனுக்குப் பரமபோக்யமான பரப்ரஹ்மத்தின் அநுபவம் பலனாக ஓதப்பட்டிருப்பது காண்கிறது. ஸகல லோகங்களிலும் ஸகல பூதங்களிலும் ஸகலாத்மாக்களிலும் இருப்பதான [யத் அந்நம்] பரம போக்யமான யாதொரு பரப்ரஹ்மமுண்டோ, [தத் அத்தி] அதை யனுபவிக்கிறான் என்று அந்த ச்ருதிக்குப் பொருள். அத்யதே இதி அந்நம்=அநுபவிக்கப்படுகிறது; போக்யமாகக் கொள்ளப்படுகிறது என்றவாறு. *ரஸோ வை ஸ:; ரஸம் ஹ்யேவாயம் லப்த்வா ஆநந்தீ பவதி* என்று தைத்திரீயோபநிஷத்தில் ஓதப்பட்ட பரப்ரஹ்மாநுபவமே இங்கு ஓதப்பட்டதாகிறது. முமுக்ஷுக்களுக்கு ஹேயமான ப்ராக்ருதமான அந்நமன்று இங்கு அந்நமத்தி என்பதனால் விவக்ஷிதம்.

மேலும் * தத் யதா இஷீகதூலம் அக்நௌ ப்ரோதம் ப்ரதூயேத, ஏவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே* என்று வைச்வாநராத்மோபாஸகனுக்கு ஸகல பாபங்களும் தொலைவது பலனாகச் சொல்லப் பட்டுள்ளது; வைச்வாநராத்மாவுக்கு த்யுலோகம் முதலான த்ரைலோக்யத்தையும் சரீரமாகவுடைமையும் சொல்லப்பட்டுள்ளது; ஆக இத்தகைய அஸாதாரண தருமங்களினால் வைச்வாநராத்மா பரமாத்மாவே யென்று நிர்ணயிக்கக் குறையில்லை. இந்த வைச்வாநரசப்தம் ஜாடராக்நிபரமென்று சங்கிப்பதற்கு ஸ்வல்பஹேது இருந்தாலும், *ஸ ஏஷோக்நிர் வைச்வாநரோ யத்புருஷ:* என்று நிருபாதிக புருஷசப்த வாச்யத்வம் இங்கு ஸ்பஷ்டமாக ஓதப்பட்டிருக்கையாலே இது ஜாடராக்நிக்கு அஸம்பாவிதம். த்ரைலோக்ய சரீரகத்வமும் அஸம்பாவித மென்பது புநருக்தம். ஜாடராக்நி விஷயகமாகத் தோன்றுகிற அக்நிசப்தமும் தச்சரீரக பரமாத்மபரமாகவே கொள்ளப்படவேணும்; ஏனென்னில், அதனிடத்தில் அஸம்பாவிதமான தருமங்கள் ஓதப்பட்டிருக்கையினாலே. *பகவாநிதி சப்தோயம் ததா புருஷ இத்யபி, நிருபாதீ ச வர்த்தேதே வாஸுதேவே ஸநாதநே* என்கிற ப்ரமாணமானது நிருபாதிகமான புருஷசப்தம் பரமாத்மாவுக்கு அஸாதாரணமென்று திடப்படுத்தியிருக்கையாலே *ஸ ஏஷோக்நிர் வைச்வாநரோ யத் புருஷ:* என்கிற ச்ருதிவாக்யம் ஜாடராக்நியை வ்யாவர்த்தித்தே தீரும். ஆக அக்நி சப்த ஸாமாநாதிகரண்யமானது வைச்வாநரத்துக்கு பரமாத்மத்வத்தை நிர்ணயிப்பதில் விரோதியாக ஆகமாட்டாது. தச்சரீரகத்வேந பரமாத்மோபாஸநம் இங்கு விதிவிஷயமென்று கொள்ளக்கடவது.

(விசேஷக்குறிப்பு.) இவ்வதிகரணத்தில் *ஸாக்ஷாதப்யவிரோதம் ஜைமிநி:* என்கிற இருபத்தொன்பதாவது ஸூத்ரம் வேதாந்திகளால் விசேஷித்துக் குறிக் கொள்ளத்தக்கது. அக்நி வைச்வாநராதி சப்தங்களெல்லாம் தத்தச் சரீரகத்வேந பரமாத்மாவைத் தெரிவிப்பதாகக் கொள்ளுகிற ஒரு ப்ரகாரமிருக்கட்டும்; [ஸாக்ஷாதபி அவிரோதம் ஜைமிநிராசார்யோ மந்யதே.] அக்நிசப்தத்திற்கு (அக்ரம் நயதி) என்று வ்யுத்பத்தி கொண்டால் ஸாக்ஷாத்தாகவே பரமாத்மாவைச் சொல்லுமென்னத் தட்டில்லை. அபர்யவஸாநவ்ருத்த்யா பரமாத்மபர்யந்தத்வம் கொள்ளுவதிற்காட்டிலும் ஸாக்ஷாத்தாகவே கொள்ளக் கூடிய விடங்களில் இங்ஙனே கொள்ளலாமென்பதை ஸூத்ரகாரர் காட்டினாராயிற்று. சரீபதி: இத்யாதி

விசேஷண யோகமில்லாத இந்த்ரசப்தம் காணுமிடங்களில் ''இதி-பரமைச்வர்யே'' என்பதைக் கொண்டு பரமேச்வரனை பரமாத்மாவை அர்த்தமாகக் கொள்ளு வதில் அஸம்பாவிதத்வ மொன்று மில்லையன்றோ. இங்ஙனே பலவுங்காண்க. (15)

வைச்வாநராதிகரணம் முற்றிற்று.

# 16. பூமாதிகரணம்.

ஸூ. பூமா ஸம்ப்ரஸாதாத் அத்யுபதேசாத். 1-3-7.

ச்சாந்தோக்யத்தில் ஓதப்படும் வாக்யமொன்று *யத்ர நாந்யத் பச்யதி நாந் யத் ச்ருணோதி நாந்யத் விஜாநாதி ஸ பூமா; அத யத்ர அந்யத் பச்யதி அந்யத் ச்ருணோதி அந்யத் விஜாநாதி தத் அல்பம்* என்பதாக. (இதன் பொருளாவது) எந்த வஸ்து அநுபவிக்கப்படும்போது வேறு எந்தவஸ்துவையும் கண்கொண்டு காணமாட்டாரோ, காதுகொண்டு கேட்கமாட்டாரோ அறியவேமாட்டாரோ அது பூமா; எந்த வஸ்து அநுபவிக்கப்படும்போது வேறு வஸ்து கண்ணுக்கும் காதுக் கும் அறிவுக்கும் விஷயமாகுமோ, அது அல்பம்-என்பதாம். இங்கு (பூமா) என்பது இமநிச்ப்ரத்யயாந்தமான சப்தமாதலால் 'பஹோர்பாவ:-பூமா' என்கிற வ்யுத்பத்தி யினால் பஹுத்வமென்று பொருள் பெற்றதாகிறது. எனவே தர்மபரமான சப்த மிது என்று தேறிற்றுகிறது. ஆனாலும் மேலே *யத்ர அந்யத் பச்யதி ..தத் அல்பம்* என்றிருப்பதனாலே அல்ப சப்தம் தர்மிபரமேயொழிய தர்மபரமல்லாமையாலே அதற்கு ப்ரதியோகியான (பூமா) என்பதும் தர்மிபரமாகவே கொள்ளத்தக்க தாகும். பெருமை என்று பொருளன்றிக்கே பெரிது என்று பொருள் தேறிற்று கிறது. இந்த ப்ரகரணத்தில் *தரதி சோகமாத்மவித்* என்று தொடங்கி பூம விஜ்ஞானத்தை யுபதேசித்து *ஆத்மைவ இதம் ஸர்வம்* என்று ஆத்மாவை யிட்டே உபஸம்ஹரித்திருக்கையாலே (பூமா வென்று) மஹத்தாகச் சொல்லப் படுகிறவஸ்து ஆத்மாவென்று தேறுகிறது. இப்படி பூம குணவிசிஷ்டமாகச் சொல்லப்படுகிற ஆத்மா ப்ரத்யகாத்மாவா? பரமாத்மாவா? என்று ஸம்சய முண்டாமளவில், ப்ரத்யகாத்மா வென்று பூர்வபக்ஷ முண்டாகிறது. ஏனென்னில்; *ச்ருதம் ஹ்யேவ மே பகவத்த்ருசேப்யஸ் தரதி சோகமாத்ம வித்* என்று ஆத்ம ஜிஜ்ஞாஸையினால் வந்து பணிந்த நாரத மஹர்ஷியின் பொருட்டு நாமம் முதல் ப்ராணமளவும் உபாஸ்யங்களாக ஸநத்குமாரரால் உபதேசிக்கப்பட்டவிடத்து *அஸ்தி பகவோ! நாம்நோ பூய:? அஸ்தி பகவோ வாசோ பூய? [நாமத்துக்கு மேற்பட்டதுள்ளதா? வாக்குக்கு மேற்பட்டதுள்ளதா]? இத்யாதிகளான வினாக்கள் செல்வதையும், *வாக் வாவ நாம்நோ பூயஸீ; மநோ வாவ வாசோபூய:* [நாமத்திற்காட்டிலும் வாக்கு மேம்பட்டது; வாக்கைக் காட் டிலும் மநஸ்ஸு மேம்பட்டது] இத்யாதிகளான விடைகள் செல்வதையும் காணா நின்றோம். இங்ஙனே காண்பது ப்ராணனுக்குக் கீழ்ப்பட்டவரையிலுமே. ப்ரா ணனைச் சொல்லியான பிறகோவென்னில் வினாவுமில்லை, விடையுமில்லை. ஆகவே இந்த ஆத்மோபதேசமானது ப்ராணபர்யந்தமே யென்று தெரிகிறது. ஆகவே இங்கு ப்ராண சப்தநிர்திஷ்டன் ப்ராணஸஹசாரியான ப்ரத்யகாத்மாவேயொழிய

வாயுவிசேஷமாத்திரமன்று. மேலும் *ப்ராணோ ஹ பிதா ப்ராணோ ஹ மாதா* இத்யாதி வாக்யங்களும் ப்ராணனை சேதந வஸ்துவாகத் தெரிவிக்கின்றன. 'பூமா' என்று பெரிதாகச் சொல்லப்பட்ட வஸ்து இந்த ப்ராணனே யாகும். ஆக ப்ரத்யகாத்மாவே இங்கு பூமசப்த நிர்திஷ்டனுகக் கடவன்—என்று பூர்வபக்ஷம்;

இதன்மேல் ஸித்தாந்தம் வருமாறு;--[ஸம்ப்ரஸாதாத் அத்யுபதேசாத்] பூமா என்று அநல்பனுகச் சொல்லப்பட்டவன் பரமாத்மாவேயாவன்; (ஏனென்றல்;) ஸம்ப்ரஸாதாத்—ஜீவாத்மாவைக் காட்டிலும், அதி—அதிகமாக (அர்த்தாந்தரமாக), உபதேசாத்—தெரிவிக்கப்படுகையாலே என்று ஸூத்ரத்திற்குப் பொருள் காண்க. ச்சாந்தோக்யத்தில் (8-12-2.) * ஏஷ ஸம்ப்ரஸாதோ' ஸ்மாச்சரீராத் ஸமுத்தாய பரம் ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேண அபிநிஷ்பத்யதே* என்கிறவிடத்தில் ஜீவாத்மவாசகமாக ஸம்ப்ரஸாத சப்தமிருப்பதனுல் உபநிஷத்ப்ரஸித்திகொண்டு இங்ஙனே பொருளுரைக்கப்பட்டது. இது நிற்க. ச்சாந்தோக்யத்தில் (7-15-1) *ப்ராணோ வா ஆசாயா பூயாந்* என்று ப்ரத்யகாத்மாவை ஆசையினும் அதிகனுகச் சொல்லி மேலே ப்ராணோ ஹ்யேவைதாநி ஸர்வாணி பவதி ஸ வா ஏஷ ஏவம் பச்யந் ஏவம் மந்வாந ஏவம் விஜாநந் அதிவாதீ பவதி, தஞ்சேத்......நாபஹ்நுவீத* என்று பதினைந்தாவது கண்டம் தலைக்கட்டப்பட்டது. இங்கு *அதிவாதீ பவதி* என்றதற்குப்பொருள்யாதெனில்; தான் உபாஸிக்கும் வஸ்துவை உத்க்ருஷ்டமாகச் சொல்லுகிறுனென்பதாம். இது உபாஸ்யதேவதையின் அதிசயத்தில் பர்யவஸிப்பதாம்; அதாவது, தன்னுலே உபாஸிக்கப்படும வஸ்து ஸர்வோத்க்ருஷ்டமானது என்று சொல்லுபவன் என்றது அந்த உபாஸ்ய வஸ்து மேன்மையில் உத்க்ருஷ்டமானது என்று தெரிவித்தவாறும். இவ்விடத்தில் (7-16-1) *ஏஷ து வா அதிவததி யஸ் ஸத்யேந அதிவததி* என்றவாக்கியம் உற்று நோக்கத்தக்கது. இதில் (து) என்பது இருப்பதனுலே இதரவ்யாவர்த்தகமான அந்த துகாரம் வேறொரு அதிவாதியிருப்பதாகக் காட்டிக்கொடுத்து, 'யஸ் ஸத்யேநாதிவததி யென்று ஸத்யசப்தவாச்யமான பரப்ரஹ்மத்தை உபாஸிப்பவனுக்கு மேலும் அதிசயிதமான அதிவாதித்வத்தைச்சொல்லி, அவனுடைய அதிவாதித்வத்திற்கு அடியானதும் ஸத்யசப்தவாச்யமானதும் ப்ரத்யகாத்மாவிற்காட்டிலும் வேறுபட்டதுமான பரப்ரஹ்மத்தை * ஸத்யம் த்வேவ விஜிஜ்ஞாஸிதவ்யம் * [ஸத்யசபதவாச்யமான ப்ரஹ்மமே உபாஸிக்கத்தக்கது] என்று ஸநத்குமாரர் உபதேசித்துத் தலைக்கட்டியிருக்கின்றுர். இங்கு முந்தின பர்யாயங்களில் சொல்லப்படாத அதிவாதித்வம் சொல்லப் பட்டிருக்கையாலே, உபக்ராந்தமான ஆத்மோபதேசமும் ப்ராணசப்த வாச்யமான ப்ரத்யகாத்மாவில் தலைக்கட்டிற்றென்று 'ப்ராணத்திற்காட்டிலும் மேம்பட்டது உள்ளதா?' என்று நாரதர் கேளாதிருக்கவும் ஸநத்குமாரர் தாமாகவே அதிலும் மேம்பட்ட பரமாத்மாவை உபதேசிக்கிறுர்—*ஏஷ து வா அதிவததி யஸ் ஸத்யேநாதிவததி யென்று. *ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம* இத்யாதிகளில் ஸத்ய சப்தவாச்யத்வம் பரப்ரஹ்மத்திற்கு ப்ரஸித்தம். 'ஸதைதைக ரூபத்வேந நிர்விகாரத்வாத் ஸத்யத்வம்' என்று வேதாந்திகளின் கோஷ்டிகளில் ப்ரஸித்தமானதே. ஆக பூமசப்தவாச்யன் ப்ரத்யகாத்மாவல்லன், பரமாத்மாவே யென்று ஸித்தாந்திதமாயிற்று. ... ... .... .... (16)

பூமாதிகரணம் முற்றிற்று.

# 17. த ஹ ர ா தி க ர ண ம்

— முதலத்யாயம் – மூன்ருவது பாதத்திலுள்ளது —

ச்சாந்தோக்யோபநிஷத்தில் *அத யதிதமஸ்மிந் ப்ரஹ்மபுரே தஹரம் புண்டரீகம் வேச்ம தஹரோஸ்மிந்நந்தரஆகாச: தஸமிந் யதந்தஸ் தத் அந்வேஷ்டவ்யம்* இத்யாதி வாக்யத்தாலே ஓதப்பட்டிருப்பது தஹரவித்யை. இந்த வித்யாப்ரகரணத்தில் மேலே *ஏஷ ஆத்மா அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர் விசோகோ விஜிகத்ஸ. அபிபாஸஸ் ஸத்யகாமஸ் ஸத்யஸங்கல்ப:* என்று குணஷ்டகம் சொல்லப்பட்டுள்ளது. இது பரப்ரஹ்மத்திற்கே ஏற்குமாதலால் தஹர சப்த வாச்யமான வஸ்து பரப்ரஹ்மமேயல்லது வேறன்று என்று இவ்வதிகரணத்தில் நிஷ்கர்ஷிக்கப்படுகிறது.

"தஹரோஸ்மிந்நந்தர ஆகாச:" என்றோதப்பட்ட தஹராகாசம் பரமாத்மாவாக இருக்கமுடியாது. ஏனென்ருல், இங்கு *தஸ்மிந் யத் அந்தஸ் ததந்வேஷ்டவ்யம்* என்றுள்ளது. அந்வேஷ்டவ்ய மென்பதற்கு – தேடத்தகுந்ததென்று பொருள். தியானிக்கத்தகுந்ததென்று பரமதாத்பர்யம். 'அந்த பரமபுருஷன் தியானிக்கத்தகுந்தவன்' என்றிருந்தால் ஒக்கும்; அப்படியில்லே; 'அதற்குள்ளே யிருப்பது தியானிக்கத்தகுந்தது' என்றுள்ளதனுல் பரமபுருஷபரத்வம் இங்குச் சொல்ல வொண்ணுது; ஆகாச சப்தத்திற்கு பூதாகாசத்தில் ப்ரஸித்தி அதிகமாக இருப்பதால் இங்கே தஹராகாசமாக ஓதப்பட்டிருக்கும்வஸ்து பூதாகாசமேயாகும்— என்று பூர்வபக்ஷம் ப்ராப்தமாக, ஸித்தாந்தம் வருமாறு:—

ஸூ, தஹர: உத்தரேப்ய: 1-3-13.

ப்ரக்ருத ஸ்தலத்தில் மேலேயுள்ள வாக்யத்தில் ஓதப்பட்ட தருமங்களினுல் [அந்த தருமங்கள் பொருந்தவேண்டியதற்காக] தஹராகாச சப்தத்தினுல் பரமபுருஷனே சொல்லப்படுகிருனென்று நிஷ்கர்ஷிப்பதாக ஸூத்ரத்தின் பொருள் எளிதாக அறியத்தக்கது. * தஹரோஸ்மிந்நந்தர ஆகாச: * என்று தஹராகாசத்தை ப்ரஸ்தாவித்து * தஸ்மிந் யத் அந்த: * என்று அதனுள்ளே யிருப்பதாகவொன்றையும் ப்ரஸ்தாவித்து "தத் அந்வேஷ்டவ்யம்" என்று தச்சப்தத்தாலே – ப்ரஸ்துதமான தஹராகாசமென்ன, அதனுள்ளே யிருக்கிற வஸ்துவென்ன ஆக இரண்டையும் எடுத்து இரண்டையும் உபாஸிக்கும்படி சொல்லிவிட்டு 'அதனுள்ளே யிருப்பது எது?' என்று கேட்டுக்கொண்டு "அஸ்மிந் காமாஸ் ஸமாஹிதா:; ஏஷ ஆத்மா அபஹதபாப்மா..........ஸத்யகாமஸ் ஸத்ய ஸங்கல்ப:" என்று ஓதப்பட்டிருப்பது ப்ரஸித்தம். இதனுல் நாம் ஸ்பஷ்டமாகத் தெரிந்துகொள்வதென்னவென்ருல், முன்னே ப்ரஸ்தாவிக்கப்பட்ட தஹராகாசம் பரமாத்மாவென்றும், அதனுள்ளே யிருக்கும் வஸ்து அபஹத பாப்மத்வம் முதலிய எண்குணமென்றும், அந்த தஹராகாசமே *ஏஷ ஆத்மா அபஹதபாப்மா* என்று அஷ்டகுண யுக்தமாக ஓதப்பட்டதென்றும் தெரிந்துகொண்டோம். ஆகாச சப்தமிருப்பதால் பூதாகாச ப்ரதீதிதானே யுண்டாகுமென்கிற வாதமும் அயுக்தம். *ஆகாசோஹ வை நாமரூபயோர் நிர்வஹிதா* இத்யாதிகளில் ஆகாச சப்தம் பரமபுருஷ

ளிடத்திலும் ப்ரஸித்தமா யிருப்பது காணலாம். ஆக, தஹராகாச சப்த நிர்திஷ்டன் பரமபுருஷனே யென்றதாயிற்று. கூரத்தாழ்வான் ஸுந்தர பாஹுஸ்தவத்தில் *வந்தேய ஸுந்தரபுஜம் புஜகேந்த்ரபோகஸக்தம் மஹாவநகிரி ப்ரணயப்ரவீணம், யம் தம் விதுர் தஹரமஷ்டகுணோபஜுஷ்டமாகாசம் ஔபநிஷதீஷு ஸரஸ்வதீஷு.* என்கிற சுலோகத்தில் இவ்வதிகரணார்த்த ஸாரத்தை அமைத்திருப்பது உணரத்தக்கது. ... ... .... ... .... ... (17)

## 18. ப்ரமிதாதிகரணம்.

இதுவும் முதலத்யாயம் மூன்ருவது பாதத்திலுள்ளது.

*அங்குஷ்ட மாத்ர: புருஷோ மத்ய ஆத்மநி திஷ்டதி, ஈசாநோ பூதபவ்யஸ்ய ந ததோ விஜுகுப்ஸதே.* என்று கடவல்லியில் ஓதப்படுகிறது. கட்டைவிரலளவான புருஷன் ஆத்மமத்யத்திலிருக்கிருனென்றும், அவன் பூதபவ்யங்களுக்கு ஈச்வரனென்றும் இதில் சொல்லிற்று. இந்த புருஷன் யாவன்? ஜீவபுருஷனாகவுமிருக்கமுடியாது, பரமபுருஷனாகவுமிருக்க முடியாது. ஏனென்னில்; ச்வேதாச்வதரோப நிஷத்தில் *வாலாக்ர சதபாகஸ்ய சததா கல்பிதஸ்ய ச, பாகோ ஜீவஸ் ஸ விஜ்ஞேய:* என்று அத்யந்தம் அணுபரிமாணனாகச் சொல்லப்பட்ட ஜீவாத்மாவுக்கு அங்குஷ்ட பரிமாணத்வம் ஸம்பவிக்கமாட்டாது. விபுவான பரமபுருஷனுக்கும் அங்குஷ்டமாத்ரத்வம் ஸம்பவிக்க விரகில்லை. ஆனால், ச்வேதாச்வதரோபநிஷத்தில் *ப்ராணாதிபஸ் ஸஞ்சரதி ஸ்வகர்மபி:, அங்குஷ்டமாத்ரோ ரவிதுல்யரூப:* என்று கர்மபரவசனான ஜீவனுக்கு அங்குஷ்டமாத்ரத்வம் சொல்லப்பட்டிருக்கக் காண்கிறதேயென்று ஒருவாதம் எழும். கீழே உதாஹரித்த *வாலாக்ரசதபாகஸ்ய* இத்யாதியான [ச்வேதாச்வதரத்திலேயேயுள்ள] ப்ரமாணத்திற்கு விருத்தமானவிது எங்ஙனே சேருமென்று கேட்க நேரும். ஹ்ருதயத்தினுள்ளே யிருப்பதாகச் சொன்னபடியாலே ஹ்ருதயோபாதிகமாக நிர்வஹித்துவிடலாமென்னில், இந்த நிர்வாஹம் பரமபுருஷனிடத்திலுமொக்கும். உபாஸகாநுக்ரஹார்த்தமாக உபாஸகஹ்ருதயத்திலிருப்பதனால் ஹ்ருதயம் அங்குஷ்டபரிமாணகமென்று கொண்டு ததுபாதிகமாகச் சொல்லலாமென்றபடி. ஏவஞ்ச, அங்குஷ்டமாத்ரத்வம் ஜீவாத்மபரமாத்மாக்களிருவர்க்கும் பொதுவென்று தேறும். பரமாத்மாவே இங்கு விவக்ஷிதனென்று எதுகொண்டு நிர்ணயிப்பதென்னில்; *ஈசாநோ பூதபவ்யஸ்ய* என்று சொல்லப்பட்ட ஸர்வேச்வரத்வம் அஸங்குசிதமாகப் பரமபுருஷனிடத்தில்தான் ஸம்பவிக்கும்; *ய: ப்ருதிவ்யாம் திஷ்டந்* இத்யாதியான அந்தர்யாமி ப்ராஹ்மணத்தில் *ய: ப்ருதிவீம் அந்தரோ யமயதி* இத்யாதியாலே சொல்லப்பட்ட ஸர்வ நியாமகத்வம் ஜீவனுக்கு ஸர்வாத்மநா அஸம்பாவிதமன்றோ. ஆக அங்குஷ்டமாத்ரப்ரமிதனான புருஷன் பரமபுருஷனேயென்று ஸித்தாந்திதமாயிற்று. அது ஸூத்ரத்தினால் விவரிக்கப் படுகிறது—

ஸூ. சப்தாதேவ ப்ரமித:—1-3-23.

ப்ரமித:— அங்குஷ்ட பரிமிதனாகச் சொல்லப்பட்டவன் பரமாத்மாவே* யாவன்; (ஏனென்னில்;) சப்தாத் ஏவ— *ஈசாநோ பூத்பவ்யஸ்ய* என்றுள்ள சப்தத்தினாலேயே. என்பது ஸூத்ரத்தின் பொருள். பரமபுருஷனுக்கு அங்குஷ்டமாத்ரத்வம் எப்படி ஸம்பவிக்குமென்ன அடுத்த ஸூத்ரம் அந்த சங்கையைப்

பரிஹரிக்கிறது. ஸூ. ஹ்ருத்யபேக்ஷயா து மநுஷ்யாதிகாரத்வாத். (1-3-24.) இதன் பொருள் கீழே விவரிக்கப்பட்டதாயிற்று. இதில் மநுஷ்யாதிகாரத்வாத் என்று எதற்காகச் சொல்லப்பட்ட தென்னில்; அங்குஷ்ட சூந்யங்களான குதிரை பாம்பு முதலான ஜந்துக்கள் விஷயத்தில் அங்குஷ்ட ப்ரமிதத்வம் சொல்லமுடியாதே யென்று சோத்யமுண்டாக, [மநுஷ்யாதிகாரத்வாத்] உபாஸநார்த்தமாக உபாஸக ஹ்ருதயத்தில் இருப்பதனுல்தானே அங்குஷ்டப்ரமிதத்வம் உபபாதிக்கப்பட்டது; அந்த உபாஸனத்திற்கு அதிகாரிகள் மநுஷ்யர்கள்; அவர்களுக்கு அங்குஷ்ட சாலித்வம் நிர்விவாதம்-என்று தெரிவிப்பது ஸூத்ரகாராபிமதம்.

இங்கு விஷய வாக்யத்தில் ஈசாந: என்றுள்ளது; *சம்புரீச: பசுபதி: சிவச் சூலீ மஹேச்வர:, ஈச்வரச் சர்வ ஈசாந:* இத்யாதி கோசங்களினுல் ஈசாந சப்தம் பசுபதியென்கிற தேவதாவிசேஷத்தில் ரூடமென்று அறிகிறேம். ஆக, *அங்குஷ்டமாத்ர: புருஷ:* என்னப்பட்ட புருஷன் நாராயணனல்லன், பசுபதி யென்பவனே-என்றெருவாதம் கிளரும். இங்கு தத்துவமுணர்த்துகிறேம்; ஈசாந: என்று மட்டும் இங்கில்லை; "பூதபவ்யஸ்ய ஈசாந:" என்றுள்ளது. அதனுல் ஸர்வேச் வரத்வம் தெரிவிக்கப்படுகிறது. மேலே காட்டின கோசத்தில் ஈசாநபதம் போல் ஈச்வரபதமும் சம்புவினிடத்தில் ரூடமென்று தெரியவருகின்றது. அதுகொண்டு ஸர்வேச்வர: எனவருமிடங்களில் பசுபதியை அர்த்தமாகக் கொள்வதில்லையன்றே. மேலும் விஷ்ணுஸஹஸ்ரநாமத்தில் ஈசாந: என்கிறவிது விஷ்ணு நாமங்களில் ஒன்றுகவும் ஓதப்பட்டுள்ளது. ப்ரக்ருத விஷயவாக்யத்தில் "பூதபவ்யஸ்ய ஈசாந:" என்று ஸ்பஷ்டமாக விருப்பதால் ஸர்வேச்வரனை நாராயணனே ச்ருதிவிவக்ஷித னென்பது நிஸ்ஸந்தேஹம். .... ... ... ... (18)

## 19. தேவதாதிகரணம்.

(இதுவும் முதலத்யாயம் மூன்றுவது பாதத்திலுள்ளது.)

கீழே *ஹ்ருத்ய பேக்ஷயா து மநுஷ்யாதிகாரத்வாத்* என்கிற ஸூத்ரத்தில் பரமபுருஷனை உபாஸிப்பதில் மநுஷ்யர்களுக்குமட்டுமே அதிகாரமுள்ளதாகத் தெரிவிக்கப்பட்டது. அதன்மேல் அது தேவர்களுக்குமுண்டென்கைக்காக இவ்வதிகரணம் தோன்றுகிறது.

ஸூ. ததுபர்யபி பாதராயணஸ் ஸம்பவாத். 1-1-25. தத் :-அந்த பரமாத்மோ பாஸநமானது, உபரி அபி-மநுஷ்யர்களிற் காட்டிலும் மேம்பட்டவர்களான தேவர் களிடத்திலும் ஸம்பவிக்கக் குறையில்லை; ஏனெனில்; ஸம்பவாத் – எவன் அர்த் தியோ, எவன் ஸமர்த்தனே அவன் அதிகாரி. என்பது நியதமாதலால் தேவதைக ளுக்கு உபாஸநத்தில். அர்த்தித்வமும் ஸாமர்த்தியமும் ஸம்பவிக்குமதாகையாலே இதி பாதராயணே மந்யதே என்று ஸூத்திரத்தின் பொருள் அறியத்தக்கது.

ஒரு காரியத்தில் ஒருவர் அதிகாரியாக வேணுமானுல் இரண்டு வேண்டும். இது நமக்கு வேணுமென்கிற அபேக்ஷை முதலது; அதற்குரிய ஆற்றல் இரண்டாவது. இவையே அர்த்தித்வ ஸாமர்த்தியங்களெனப்படும். இந்திரன் முதலான தேவர்களுக்கும் ஸாம்ஸாரிகமான தாபத்ரயமுண்டாகி வருந்துவதையும், அதற் குப் பரிஹாரம் தேடுவதையும் ச்ருதீதிஹாஸ புராணங்களில் காணு நின்றேம்.

ஆகையாலே அவர்களுக்கும் உபாஸனத்தில் அதிகாரமுண்டென்று கொள்ளக் குறையில்லை. என்பது இவ்வதிகரணத்தின் ப்ரமேயம்.

இங்குத் தோன்றும் பூர்வபக்ஷப்ரகாரம் என்னவென்றால்; தேவர்களுக்கு அர்த்தித்வமும் ஸாமர்த்தியமும் உண்டென்று கொள்ளவேணுமானால் அவர்களுக்கு தேஹமுண்டென்று முக்கியமாகச் சொல்லியாகவேண்டும். விவேகம் விமோகம் முதலான ஸாதநஸப்தகத்தாலே அநுக்ருஹீதமான பரப்ரஹ்மோபாஸனம் அனுஷ்டிக்கப் படவேண்டில் சரீரமில்லாமல் அது ஸாத்யமன்று. அவர்களுக்கு சரீரமுண்டென்று ஸாதிப்பதற்கு ஒரு ப்ரமாணமும் காணோம், ஆகவே அவர்களுக்கு அர்த்தித்வமும் ஸாமர்த்தியமும் ஸம்பவிக்கமாட்டாதென்று. இந்த பூர்வபக்ஷத்தைத் தள்ளுகிறது இந்த *தது்பர்யபீத்யாதி ஸூத்ரம். * பராஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே * இத்யாதி ச்ருதி வாக்கியங்களினால் அபரிமிதஜ்ஞாந சக்தியுக்தனாக ஓதப்பட்டுள்ள பரம புருஷனிடத்தில் அவர்களுக்கு அர்த்தித்வம் ஸம்பவிக்கக் குறையில்லை ஸாமர்த்தியத்திற்கும் குறையில்லை; படுதரமான தேஹேந்த்ரியாதிகள் தேவர்களுக்கு உண்டென்பதைப் பல சாஸ்த்ரங்களினால் நாம் அறியா நின்றோம்! உபநிஷத்துக்களில் ஸ்ருஷ்டிப்ரகரணங்களிலும் உபாஸன ப்ரகரணங்களிலும் இது ஸ்பஷ்டமாகவே காணப்படா நின்றது. ஸ்ருஷ்டி வாக்யங்களெல்லாவற்றிலும் தேவதிர்யங்மநுஷ்ய ஸ்தாவரரூபேண நான்கு வகைப்பட்ட ஸ்ருஷ்டி செய்யப்படுவதாக ஓதப்பட்டிரா நின்றது. தேவாதி பேதமானது தத்தத் கர்மாநுகுணமாக ப்ரஹ்மலோகம் முதலான பதினான்கு லோகங்களில் நேரும் பலன்களை அநுபவிப்பதற்கு யோக்யமான தேஹேந்த்ரியாதி ஸம்பந்தத்தைப் பொறுத்ததாகவுள்ளது. ஆத்மாக்கள் இயற்கையாகவே தேவாதிகளாக வுள்ளனவல்ல. சரீர பேதத்தால் தான் தேவ மநுஷ்யாதி வ்யபதேசம் விளைகிறது. வேதங்களிலும் உபநிஷத்துக்களிலும் இதிஹாஸ புராணங்களிலும் பல பல தேவர்களைப்பற்றின பல்வேறு கதைகளைக் கண்டும் கேட்டும் வருகின்றோம். * வஜ்ரஹஸ்த: புரந்தர: * என்றும் * தேநேந்த்ரோ வஜ்ரமுதயச்சத் * என்றும் * தௌ ஹ த்வாத்ரிம்சதம் வர்ஷாணி ப்ரஹ்மசர்யமூஷது:, தௌ ஹ ப்ரஜாபதிருவாச * இத்யாதி பரச்சத பரஸ்ஸஹஸ்ர வாக்யங்களினால் தேவர்களுக்கு சரீரமுடைமையையும் இந்த்ரியாதிபாடவமுடைமையையும் அறிகின்றோம்.

அன்றியும், இந்திரன் வாயு அர்யமா ப்ரஜாபதி முதலான பலபல தேவதைகளை யுத்தேசித்துக் காம்யேஷ்டிகளின் விதிகளும் அந்த இஷ்டிகளால் பல ப்ராப்தியும் கருமகாண்டங்களில் நிரம்ப ஓதப்பட்டிருப்பதால் அவர்களுக்கு சரீரமில்லையாகில் இதெல்லாம் பொய்யுரையாக ஆகவேண்டிவருமாதலால் தேவர்களுக்கு சரீரமில்லையென்று ஸாதிக்கவே முடியாது. பிரமன் இந்திரன் முதலான தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் மற்றுமுள்ளார்க்கும் தேஹேந்த்ரியாதிகளும் ஸ்வபாவ பேதங்களும் ஸ்தான விசேஷங்களும் போக விசேஷங்களும் க்ருத்ய விசேஷங்களும் ஸ்பஷ்டமாக ஓதப்பட்டிருக்கையாலே அவர்களுக்கு சரீரஸம்பந்தம் நிர்விவாதமாக வுண்டென்று கொள்ளக் குறையில்லையாதலால அர்த்தித்வமும ஸாமர்த்தியமும் மநுஷ்யர்களுக்குப்போல தேவர்களுக்கு முண்டென்னத் தட்டில்லை. ஆக உபாஸநாதிகாரம் மநுஷ்யர்களுக்குமட்டுமன்று தேவர்களுக்கு முண்டென்று ஸ்தாபிக்கப்பட்டதாயிற்று.

(தொடரும்)

# ஸ்ரீ பாஷ்யாதிகரணமெழுபத்தாறு

(226—தொடர்ச்சி)

## 20. அபசூத்ராதிகரணம்.

இதுவும் முதலத்யாயம் மூன்றுவது பாதத்திலுள்ளது. இதன்கீழ் தேவதாதிகரண ப்ரமேயம் நிரூபிக்கப்பட்டது. (ஒரு திருத்தம்;—தேவதாதிகரணத்தின் முதல் ஸூத்ரம் *தத் உபர்யபி பாதராயணஸ் ஸம்பவாத்* என்பது. இதற்கு அத்யாய பாத ஸூத்ர ஸங்கியை 1—3—25 என்பதே. ஆனால் (பக்கம் 47ல்) 1—1—25 என்று விழுந்திருப்பது அச்சுப்பிழை; திருத்திக்கொள்க.) ... ... பரமபுருஷனையுபாஸிப்பதில் மநுஷ்யர்களுக்குப்போலே தேவர்களுக்கும் அதிகாரமுண்டா? என்கிற விசாரத்தில் அது உண்டென்று தேவதாதிகரணத்தில் ஸ்தாபிக்கப்பட்டது. ஒரு காரியத்தில் ஒருவர் அதிகாரியாகவேணுமானால் இது நமக்கு வேணுமென்கிற அபேக்ஷையும் அதற்குரிய ஆற்றலுமாகிற இரண்டு வேண்டும். இவையே அர்த்தித்வ ஸாமர்த்தியங்களெனப்படுவன. இது மநுஷ்யர்களுக்குப்போல தேவர்களுக்குமுண்டாதலால் அவர்களுக்கும் பரமபுருஷனையுபாஸிப்பதில் அதிகாரம் தடையற்றதென்று அவ்வதிகரணத்தில் நிரூபிக்கப்பட்டது. அந்த அர்த்தித்வ ஸாமர்த்தியங்கள் சூத்ரனுக்கும் ஸம்பவிக்கக் குறையில்லாமையாலே ப்ரஹ்மவித்யையில் அவனுக்கும் அதிகாரமுண்டோவென்கிற சங்கையில் இல்லையென்று ஸ்தாபிப்பதற்காக இவ்வதிகரணம் ப்ரவ்ருத்தமாகிறது. ஏழு ஸூத்ரங்கள் கொண்டது இவ்வதிகரணம். அதில் முதல் ஸூத்ரம்

**ஸூ. சுகஸ்ய ததநாதரச்ரவணாத் ததாத்ரவணாத் ஸூச்யதே ஹி 1-3-33.**

சூத்ரனுக்கு வேதத்தில் அதிகாரமில்லையென்பது ஸித்தம். அன்றியும், யஜுர்வேதத்தில் ஏழாவது காண்டம் முதல் ப்ரச்நம் முதலநுவாகத்தில் ***தஸ்மாத் சூத்ரோ யஜ்ஞே அநவக்லுப்த:*** என்று சூத்ரனுக்கு யஜ்ஞாதிகாரமில்லையென்று ஸ்பஷ்டமாகவே மறுக்கப்பட்டிருக்கின்றது. இப்படியிருக்க சூத்ரனுக்கு ப்ரஹ்மவித்யையில் அதிகாரமுண்டா இல்லையா என்கிற விசாரத்திற்கு ப்ரஸக்தியே கிடையாதேயென்று நினைக்கக்கூடும். கேண்மின்; அக்நிவித்யாஸாத்யங்களான கருமங்களில் சூத்ரனுக்கு அதிகாரமில்லையாகிலும் பரப்ரஹ்மோபாஸனமென்பது மனோவ்ருத்தி மாத்திரமேயாதலால் அதில் அதிகாரம் கூடாமையில்லை. உபாஸனத்திற்கு சாஸ்த்ரோக்தங்களான கருமங்கள் அபேக்ஷிதமென்பதை ஒப்புக்கொள்வோம். அந்தந்த வர்ணாச்ரமங்களுக்கு ஏற்ற கருமங்களே அபேக்ஷிதமாதலால் சூத்ரனுக்குத் தன் வருணத்திற்கேற்றவாறு முந்தின வருணத்தவர்களுக்குச் செய்யும் சுச்ரூஷையே கருமமாதலால் அந்த கர்மாநுஷ்டானத்திற்குக் குறையில்லையே. இவனுக்கு வேதாத்யயனமும் வேதாந்தச்ரவணமும் இல்லையாகிலும் இதிஹாஸ புராண ச்ரவணம் குறையற்றதேயன்றோ. *ச்ராவயேச் சதுரோ வர்ணாந் க்ருத்வா ப்ராஹ்மணமக்ரத:* என்று ப்ரமாணமுமுள்ளது. சூத்ரர்களான விதுராதிகள் ப்ரஹ்மநிஷ்டர்களென்பதை இதிஹாஸபுராணங்களில் காணுகின்றோம். இவையெல்லாவற்றுக்கும் மேற்பட ச்சாந்தோக்யத்தில் ஸம்வர்க்கவித்யையில் சூத்ரனுக்கு [ஜாநச்ருதிக்கு] ப்ரஹ்மவித்யையில் அதிகாரம் காணப்படுகிறது. (எங்ஙனேயென்னில்;) சுச்ரூஷுவாக வந்த

ஜாநச்ருதியை ஆசார்யரான ரைக்வர் **சூத்ர!** என்று விளித்து அவனுக்கு ப்ரஹ்மவித்யையை உபதேசித்திருப்பதாகத் தெரியவருகிறது—***ஆஜஹாரேமாச் சூத்ர! அநேநைவ முகேந ஆலாபயிஷ்யதா:*** என்கிற ரைக்வவாக்யத்தில் ஜாநச்ருதியென்பவன் சூத்ரனாக விளிக்கப் பட்டு அவனுக்கு ப்ரஹ்மவித்யோபதேசம் செய்யப்பட்டிருக்கின்றது. ஆகவே சூத்ர னுக்கும் ப்ரஹ்மவித்யாதிகாரமுண்டென்று பூர்வபக்ஷம் ப்ராப்தமாக, அங்கு இல்லை யென்று மறுக்கப்படுகிறது இவ்வதிகரணத்தில்.

சூத்ரனுக்கு ப்ரஹ்மவித்யாதிகாரம் ஸம்பவிக்கமாட்டாது. ஏன்? யோக்யதைக் குறுப்பான அர்த்தித்வ ஸாமர்த்தியங்களிரண்டனுள் ஸாமர்த்தியமென்பது கிடையாதத லால், அர்த்தித்வமிருக்கலாம்; அதனால் பயனில்லை. ஸாமர்த்யமில்லாத அர்த்தித்வம் நிஷ்ப்பலம். வேதாத்யயனத்தில் அதிகாரமில்லையென்றபோதே இது ஸித்தம். இதிஹாஸ புராண ச்ரவணயோக்யதை யுண்டேயென்னில்; அதனால் பாபக்ஷயம் முதலான பலன் ஸித்திக்குமேயல்லது உபாஸனம் ஸித்திக்கமாட்டாதென்பது உறுதி. ஸம்வர்க்க வித்யையில் சுச்ரூஷுவாக வந்த ஜாநச்ருதியை ஆசார்யரான ரைக்வர் **சூத்ர!** என்று விளித்து ப்ரஹ்மவித்யோபதேசம் பண்ணினரென்பது பற்றிய தத்துவம் கேளீர்; ***சுகஸ்ய ததநாதரச்ரவணாத்*** இத்யாதியான ப்ரக்ருத (ப்ரதம) ஸூத்ரத்தில் அந்த தத்துவமே விளக்கப்பட்டுள்ளது இவ்விடத்தில் **சூத்ர!** என்கிற ஸம்போதனமானது சோகமடைந் திருப்பவனே! என்னும் பொருளுடையதேயல்லது சூத்ரஜாதியனே! என்னும் பொரு ளுடையதன்று—என்பது ஸூத்ரத்தின் தேர்ந்த பொருள். ஜாநச்ருதியின் இதிஹாஸ முணர்ந்தால் இது விசதமாகும்.

அந்த இதிஹாஸம் வருமாறு;—க்ஷத்ரியனான ஜாநச்ருதியென்பவன் அன்னதானங் களும் த்ரவ்யதானங்களும் விசேஷமாகச் செய்துகொண்டு பரமதார்மிகனாயிருந்துவந்தான். ஆனால் அவனுக்கு ப்ரஹ்மஜ்ஞானம் மட்டுமில்லாமலிருந்தது. அவன் செய்த பல தருமங் களினால் மிக மகிழ்ச்சியடைந்த மஹாத்மாக்களிருவர் அந்த ஜாநச்ருதிக்கு ப்ரஹ்மஜ் ஞானத்தில் ருசியையுண்டாக்குவதற்காக இரண்டு ஹம்ஸங்களின் வடிவெடுத்து இரவில் அவனுக்கு அணித்தாகப் பறந்து செல்லுகையில் ஒரு ஹம்ஸம் மற்றொரு ஹம்ஸத்தை நோக்கிச் சொல்லிற்று—அப்பா பல்லாக்ஷனே! இங்கே ஜாநச்ருதியென்கிற மஹானுடைய தேஜஸ்ஸானது வானளாவியிருக்கின்றது; அதில் நீ கொளுந்தாதபடி உன்னை நோக்கிக் கொள் என்றது. இங்ஙனே ஜாநச்ருதியை ப்ரசம்ஸித்துச் சொன்ன வார்த்தையைக் கேட்ட மற்றொரு ஹம்ஸமானது—'அப்பா! இந்த ஜானச்ருதியை ப்ரஹ்மவித்துக்களில் தலைவரான ரைக்வராக நினைத்துவிட்டாயோ? இவன் மஹா தார்மிகனாயிருந்தாலும் ப்ரஹ்மஜ்ஞானமில்லாதவனாகையாலே மஹாஜ்ஞானிகரான ரைக்வரை யொத்தவனா வனோ?' என்று ஹேளனமாகச் சொல்லிப் போயிற்று. இங்ஙனே தன்னையிழித்துக் கூறியதைக் கேட்ட ஜாநச்ருதி தனக்கு ப்ரஹ்மஜ்ஞானமில்லாமையினாலே இப்படி கர்ஹையுண்டாயிற்றென்று மனம் நொந்து ரைக்வரிடம் ப்ரஹ்மஜ்ஞானம்பெற விரும்பி ரைக்வரிருக்குமிடத்தைத் தெரிந்துவர ஒருவனையனுப்பித் தெரிந்துகொண்டபின் தானே ரைக்வரிடம் சென்று தன் சக்திக்கியன்ற குருதக்ஷிணையை ஸமர்ப்பித்துத் தனக்கு

ப்ரஹ்மோபதேசம்பண்ண வேண்டினவளவில் ரைக்வர் தமது யோக மஹிமையினால் கீழே நடந்த செய்தியையுணர்ந்து இவன் ஹம்ஸபக்ஷியின் அவஹேளன வாக்கியத்தைக் கேட்டு சோகத்தோடு ஓடிவந்திருக்கிறானென்றறிந்து வித்யோபதேசம் பெறுவதற்கு முக்கியமான நிர்வேதம் இவனுக்குள்ளதாகையாலே இவன் உபதேசபாத்திரமே யென்றுகொண்டு சூத்ர! என்றழைத்திருப்பது சோகமுடையவனே! என்கிற பொருளைக்கொண்டுதானென்று அறுதியிடத் தட்டில்லை. **"சோசதீதி—சூத்ர:"** என்று வ்யுத்பத்தி காண்க இதன் மேல் ஒரு சங்கை தோன்றும்; "யோகாத் ரூடிர் பலீயஸீ" என்பது நியாயமாகையாலே சூத்ரபதத்திற்கு சதுர்த்தஜாதியில் ரூடியிருக்கையாலே அது பிரபலமன்றோவென்று: **"க்ஷத்ரியத்வகதேச்ச"** இத்யாதிகளான மேல் ஸூத்ரங்களினால் ஜாநச்ருதிக்கு க்ஷத்ரிய ஜாதீயத்வம் ஸ்பஷ்டமாகக் காண்கிறதென்று நிரூபிக்கப்படுவதுகொண்டு தெளிக.

ஸூத்ரத்தின் பொருளாவது—**சுக் அஸ்ய ஸூச்யதே ஹி**=இந்த ஜாநச்ருதி யென்னும் க்ஷத்ரியனுக்கு சோகமுள்ளமை ஸூசிதமாகிறது; (எதனாலென்னில்;) **தத் அநாதரச்ரவணாத்**—அந்த ஹம்ஸபக்ஷியின் இழிவுரையைக் கேட்டதனால், **ததா ஆத்ரவணாத்**—அப்போதே ரைக்வரிடம் விரைந்தோடி வருகையினாலே என்றபடி. ஆக, சூத்ரனுக்கு ப்ரஹ்ம வித்யாதிகாரமில்லையென்று முடிந்தது. ... ... ✻

அபசூத்ராதிகரணம் முற்றிற்று.

## 21. வாக்யாந்வயாதிகரணம்.

(இது முதலத்யாயம் நான்காவது பாதத்திலுள்ளது.)

ப்ருஹதாரண்யகத்தில் மைத்ரேயீ ப்ராஹ்மணமென்பது ஒரு பாகம். அதில் யாஜ்ஞவல்க்யரை நோக்கி மைத்ரேயியானவள் அம்ருதத்வோபாயம் சொல்லுமாறு கேட்கையில் அவர் *ந வா அரே பத்யு: காமாய பதி: ப்ரியோ பவதி, ஆத்மநஸ் து காமாய பதி: ப்ரியோ பவதி* என்று தொடங்கி ***ஆத்மா வா அரே த்ரஷ்டவ்ய:*** என்று முடிவாகச் சொல்லியுள்ளார். இங்குள்ள **ஆத்மா** என்கிற பதம் கருமபலன்களை யநுபவிக்கிற ஜீவாத்மாவைச் சொல்லுவதன்று; *தமேவம் வித்வாந் அம்ருத இஹ பவதி* [புருஷ ஸூக்தே] இத்யாதிகளிற் சொல்லுகிற பரமாத்மாவையே நோக்கியது; அல்லாவிடில் மேல் வாக்யம் பொருந்தாது; அது பொருந்துவதற்காகப் பரமாத்மபரமாகத்தான் கொள்ள வேணும்—என்றறுதியிடுவது இவ்வதிகரணத்தின் ப்ரமேயம். இவ்வாத்மாவுக்கு ஸத்ய காமத்வ ஸத்யஸங்கல்பத்வாதிகளை மேலே சொல்லியிருக்கையாலே அது பரமாத்மாவுக்கே உபபந்நமாகக் கூடியதாகையாலே என்றதாயிற்று. பரமாத்மா விவக்ஷிதனானால் ஜீவாத்ம வாசகமான (ஆத்மா) என்கிற சப்தத்தை ப்ரயோகிப்பானேன்? பரமாத்மாவென்றே ப்ரயோகிக்கலாகாதா? என்கிற இக்கேள்விக்கு ஸூத்ரகாரரால் மேலே மூன்று ஸூத்ரங் களினால் ஸமாதானம் தெரிவிக்கப்பட்டுள்ளது. அடைவே ஆச்மரத்ய மதம், ஔடு

லோமி மதம், காசக்ருத்ஸ்நமதம் என மூவருடைய மதம் காட்டப்பட்டுள்ளது (1) ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு கார்யகாரண பாவம் ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கை யாலே அதனுல் அவர்களுக்கு அபேதம் ஏற்படுகிறது. அதைத் தெரிவிப்பதற்காகப் பரமாத்ம ஜீவாத்மாக்களுக்கு ஐக்யோக்தியுள்ளதென்று ஆச்மரத்ய மதம். (2) இனி ஔடுலோமி மதம்; கீழே காட்டிய ஆச்மரத்ய மதத்தில் ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவிட மிருந்து உத்பத்தியைக் கொள்ளுகையாலே *ந ஜாயதே ம்ரியதே வா விபச்சித்* இத்யாதி ப்ரமாணங்களோடு அது விரோதிக்கையாலும் மற்றும் அநேக தோஷ ப்ரஸங்கத்தாலும் ஆச்மரத்ய மதம் ஸாதுவன்றென்றுகொண்ட ஔடுலோமியானவர்—முக்தி தசையில் ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவோடு அபேதம் ச்ருதி ஸித்தமாயிருக்கையாலே முக்தி தசையில் பவிஷ்யத்தான ஜீவாத்ம பரமாத்ம அபேதத்தை யவலம்பித்து ஐக்யம் சொல்லிற்றாக நிர்வஹித்தார். (3) இனி காசக்ருத்ஸ்நமதம். கீழே விவரித்த ஔடுலோமி மதத்தில் மோக்ஷம் வரையில் ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு பேதமுள்ளதென்றும், முக்தி தசையில் அபேதமென்றும் கொள்ளப்படுகிறவிது ப்ரமாண விருத்தம். வெவ்வேறுபட்ட பொருள்கள் ஒன்றோடொன்று சேருமேயொழிய ஐக்கியத்தை யடையமாட்டாவாதலால் இதையறிந்த காசக்ருத்ஸ்நர்—பரமாத்மா ஜீவாத்மாவினுள் அந்தராத்மாவாக இருப்பதும், ஜீவாத்மாவுக்குப் பரமாத்ம சரீரத்வமும் ப்ரமாண ஸித்தமாகையாலே ப்ரக்ருதத்தில் ஜீவாத்மவாசியான ஆத்மசப்தம் பரமாத்மவாசியாகுமென்று நிர்வஹித்தார்.

இங்ஙனே வரிசையாக மூன்று மதங்களை யுதாஹரித்த ஸூத்ரகாரர் மேலே நான்காவது மதத்தைச் சொல்லாமையினுல் காசக்ருத்ஸ்நமதமே ஸூத்ரகாராபிமத மென்பது நிஸ்ஸந்தேஹமாக நிர்ணயிக்கப்படுகிறது. இது விசிஷ்டாத்வைதத்திற்கு மிகவிணங்கினது. அத்வைதிகளும் காசக்ருத்ஸ்நமதமே ஸூத்ரகாராபிமதமென்று இசைந்துவைத்து (அவஸ்திதே:) என்கிற பதத்திற்கு—பரமாத்மாவே ஜீவாத்மாவாக இருப்பதனுலேயென்று பொருள் கூறுகிறுர்கள். ப்ரக்ருதத்தில் ஐக்கியத்தைப் பொருந்த விடவேணும்; இங்ஙனே பொருள் கொண்டாலும் ஐக்கியம் பொருந்திவிடுகின்றதன்றே. காசக்ருத்ஸ்நர் சரீராத்மபாவத்தை யவலம்பித்தே ஐக்கியத்தைப் பொருந்தவிட்டாரென்று ஏதுக்கு ஒப்புக்கொள்ளவேணு மென்கிறுர்களவர்கள். இங்கு நாம் முக்கியமாகச் சொல்லுவதைக் குறிக்கொள்ளவேணும். **அவஸ்திதி:** என்கிற சப்தமானது "பூதலே கட: அவதிஷ்டதே. ப்ராஸாதே தேவதத்த: அவதிஷ்டதே" இத்யாதி வ்யவஹாரங்களிற் போல ஒரு வஸ்துவில் மற்றொரு வஸ்து இருப்பதைத்தான் சொல்லக்கடவது. "ப்ருதிவ்யாம் திஷ்டந், அப்ஸு திஷ்டந், தேஜஸி திஷ்டந், வாயௌ திஷ்டந், ஆகாசே திஷ்டந், ஆத்மநி திஷ்டந்" இத்யாதிகளான உபநிஷத்வாக்யங்களில் பலகால் காணப்படுகிற ஷ்டாதாதுப்ரயோகத்தை யடியொற்றியே (அவஸ்திதே:) என்கிற ஸௌத்ரப்ரயோக முள்ளதென்பதை ப்ராமாணிகர்கள் உள்ளபடியுணர்வர். பரமாத்மாதானே ஜீவாத்மாவாக இருப்பதனுலென்கிற பொருள் ஏறிட்டாலும் ஏறமாட்டாது. ... (தொடரும்)

# ஸ்ரீபாஷ்யாதிகரண மெழுபத்தாறு.

(முன்னிதழ்த் தொடர்ச்சி.)

## 22. ப்ரக்ருத்யதிகரணம்.

(முதலத்யாயம் நான்காவது பாதத்திலுள்ளது.)

கீழ்க்கடந்த வாக்யாந்வயாதிகரணத்தில் இரண்டாவதான *ப்ரதிஜ்ஞாஸித்தேர் லிங்கம் ஆச்மரத்ய:* என்கிற ஸூத்ரத்திலுள்ள ப்ரதிஜ்ஞாபதத்தினால் *ஏகவிஜ்ஞாநேந ஸர்வவிஜ்ஞாந ப்ரதிஜ்ஞையன்றோ ப்ரஸ்தாவிக்கப் பட்டது. அதனால் ஜகத்துக்கு உபாதாநகாரணம் பரமபுருஷனேயென்று தேறிற்றுகிறது. அது பொருந்தாதென்று பூர்வபக்ஷம் ப்ரஸக்தமாக அதை நிராகரித்து உபாதான காரணமும் பரமபுருஷனே யென்று ஸ்தாபிக்கத் தோன்றியது இவ்வதிகரணம்.

ஸூ. ப்ரக்ருதிச்ச ப்ரதிஜ்ஞாத்ருஷ்டாந்தாநுபரோதாத். 1-4-23.

ப்ரக்ருதி: என்கிறபதம் உபாதாநகாரணவாசகம். ச என்பதனால் நிமித்த காரணத்வம் ஸமுச்சயிக்கப்படுகிறது. பரப்ரஹ்மம் ஜகத்துக்கு நிமித்தகாரண மென்பதில் ஆக்ஷேபமில்லாதவனை நோக்கிச் சொல்லுகிறதாகையாலே நிமித்த காரணமாயிருப்பதுபோலவே உபாதாநகாரணமுமாகிறதென்று சொல்லிற்றுகிறது. இதற்கு இரண்டு ஹேதுக்கள் சொல்லப்படுகின்றன— [ப்ரதிஜ்ஞாத்ருஷ்டாந்தாநுபரோதாத்] என்று. ப்ரதிஜ்ஞையாவது ஏகவிஜ்ஞாநேந ஸர்வ விஜ்ஞாந ப்ரதிஜ்ஞை; த்ருஷ்டாந்தமாவது-ம்ருத்பிண்ட கடாதி நிதர்சனம். ஆக இவ்விரண்டும் பொருந்த வேண்டுமானால் பரப்ரஹ்மத்திற்கு உபாதாந காரணத்வம் இருந்து தீரவேணும்; உபாதாந காரணத்வம் இசையப்பட்டால் தான் ப்ரதிஜ்ஞாத்ருஷ்டாந்தங்கள் பொருந்தும்-என்பது ஸூத்ரத்தின் பொருள். ஒரே மண்ணானது முதலில் பிண்டமென்கிற அவஸ்தையையடைந்திருந்து பிறகு பானை யென்னுமவஸ்தையை அடையக் காணாநின்றோம். இதில் முந்தின அவஸ்தை யோடு கூடின த்ரவ்யம் உபாதான மென்றும், பிந்தின அவஸ்தையோடு கூடின த்ரவ்யம் உபாதேயமென்றும் வழங்கப்படுகிறது. அங்கு முந்தின அவஸ்தை பிந்தின அவஸ்தை என்று சொல்லப்படுகிற இரண்டவஸ்தைகளையுமுடைய த்ரவ்யம் ஒன்றே யாதலால் உபாதான வஸ்துவை யறிவதும் உபாதேய வஸ்துவை யறிவதும் ஒற்றுமைப்படுகிறபடியாலே உபாதானம் அறியப்பட்டால் உபாதேயமும் அறியப்பட்டதாகத் தேறுகிறது. அதுபோல ப்ரக்ருதத்தில் 'ப்ரஹ்மம் அறியப் பட்டால் ஜகத் தெல்லாம் அறியப்பட்டதாகிறது' என்று *யேநாச்ருதம் ச்ருதம் பவதி* இத்யாதி ச்ருதியாலே ஓதப்படுவதால் ப்ரஹ்மம் ஜகத்துக்கு உபாதான மென்று அறியப்பட்டதாகிறது.

இதன்மேல் ஒரு கேள்விவரும்; த்ருஷ்டாந்தத்தில் ம்ருத்தென்கிற ஒரு த்ரவ்யத்திற்கே பிண்டத்வம் கடத்வம் என்கிற இரண்டவஸ்தையும் வருகிறபடி யாலே பிண்டஜ்ஞானத்தாலே கடஜ்ஞான முண்டாவது பொருந்தும்; தார்ஷ்டாந்திகத்தில் ஜகத்தும் ப்ரஹ்மமும் ஒன்றன்றிக்கே வெவ்வேறுபட்ட பொருள்களா

கையாலே ப்ரஹ்மஜ்ஞானமும் ப்ரபஞ்சஜ்ஞானமும் ஒற்றுமைப்படாதாகையாலே ப்ரஹ்மஜ்ஞானத்தாலே ப்ரபஞ்சஜ்ஞானம் ஸம்பவிப்பதரிது. உபாதாந-உபாதேய பாவம் ஸம்பவிப்பதுமரிது ஏனென்றால், ப்ரஹ்மம் நிர்விகாரமென்பது நிர்விவாதம்; விகாரமும் அவஸ்தாபத்தியும் பர்யாயமாகையாலே விகாரம் ஸம்பவிக்கமாட்டா தென்ற போதே உபாதாநத்வமும் ஸம்பவிக்கமாட்டாதென்று தேறுமே. ஆக இக் கேள்விக்கு ஸமாதான மென்னென்னில்; கேண்மின்; ப்ரஹ்மஜ்ஞானத்தாலே ப்ரபஞ்சஜ்ஞானமுண்டாவதாக ச்ருதி சொல்லியிருக்கையாலே அவற்றுக்கு உபா தாந-உபாதேய பாவமில்லாமல அது ஸம்பவியாதாகையாலே அஃது இசையத் தக்கது. விகார சூன்யமான ப்ரஹ்மத்துக்கு விகாரரூபமான அவஸ்தை ஸாக்ஷாத் தாக ஸம்பவிப்பதன்று; சேதநாசேதநாத்மக ப்ரபஞ்ச மாகிற சரீரத்தின் வழியாய் விகாராச்ரயத்வம் ஸம்பவிக்கிறது – என்பதாக ச்ருதியின் அபிப்ராயம் ஸித்திக் கிறது. இதை நம் ஆசார்யர்கள் நன்கு உபபாதிக்கிறார்கள்

பிள்ளை லோகாசார்யர் அருளிச்செய்த தத்வத்ரயத்திலே ஈச்வர ப்ரகரணத் தில்—“இவன் தானே ஜகத்தாய்ப் பரிணமிக்கையாலே உபாதாநமுமாயிருக்கும்; ஆனால் நிர்விகாரனென்னும்படி யென்னென்னில்; ஸ்வரூபத்துக்கு விகாரமில்லா மையாலே, ஆனால் பரிணாமமுண்டாம்படி யென்னென்னில்; விசிஷ்ட விசேஷண ஸத்வாரகமாக. ஒரு சிலந்திக்குண்டான ஸ்வபாவம் ஸர்வ சக்திக்குக் கூடா தொழியாதிறே” என்றருளிச் செய்த விடத்தில் மணவாளமாமுனிகளின் வியாக் கியானத்திலே விசதமாகக் கண்டு கொள்வது.

பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ - உத்தரசதகத்தில்- ‘கார்யே அநந்தே ஸ்வைகநிஷ்ட முகதஸ் த்வாம் உபாதாந மாஹு: ஸா தே சக்திஸ் ஸமாநாதிகரண [illegible] விலங்க்ய, இச்சா யாவத் விஹரதி ஸதா ரங்கராஜாநபேக்ஷா [illegible] அதிசய கரீ ஸோர்ணநாபௌ விபாவ்யா ’ என்ற ச்லோகத்தில் இவ்வளவெல்லாம் ஸாரமாக வருளிச் செய்தார். அவ்விடத்திலும் நம்முடைய வியாக்கியானத்திலே தெளியக் காணலாம் .... ... .... ... (22)

ஸ்ரீகாஞ்சீ அண்ணங்கராசாரியர் எழுதிய
ஸ்ரீபாஷ்யாதிகரணமெழுபத்தாறில் முதலாத்யாயம்
முற்றிற்று.